# கம்பன் - சமணம்.



புலவர் S. K. இராமராசன்.

# கம்பன் – சமணம்



ஆசிரியர்

புலவர் S. K. இராமராசன் அவர்கள்

(கம்பராமன்)

தலைமைத் தமிழாசிரியர்,

கண்டர் உயர்நிலைப் பள்ளி,

வேலூர். (சேலம் மாவட்டம்)

அளித்தல் :

**திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம்,**

வந்தவாசி. (வடார்க்காடு மாவட்டம்)

**1965**



விலை 30 காசுகள்

ஜைன சமயம் எருதை அறத்தின் சின்னமாகப்
போற்றுவதை

*சீவக சிந்தாமணி ஆசிரியர்*
*விளக்கும் செய்யுள்*

" மணியினுக் கொளியக மலர்க்கு மல்கிய
வணியமை யங்குளிர் வாச மல்லதூஉந்
திணியிமி லேற்றினுக் கொதுக்கஞ் செல்வநின்
னிணைமலர்ச் சேவடி கொடுத்த வென்பவே "

—*திருத்தக்க தேவர்.*

நல்லறம் வளர்க!

# பதிப்புரை.

தொன்மையும் சிறப்புமிக்க ஜைன சமயம் மனித வாழ்வின் மேன்மைக்கும், கலைக்கும், ஆற்றியுள்ளத்தொண்டு மகத்தானது. தமிழ் மண்ணிலும் இச்சமயத்தின் பணி பெரும் சிறப்புடையது.

இத்தகைய உயர் சமயத்தை நன்கறிந்த அறிஞர்களில் கவிஞர் S. K. இராமராசனும் ஒருவர். இவர் 1960-ஆம் யாண்டு காரைக்குடி கம்பன் விழா கவியரங்கத்தில் பங்கு கொண்டு "கம்பன் சமணம்" எனும் தலைப்பில் அரங்கேற்றியக் கவிதைகளே இந்நூல். கவிஞர் கம்பரது காவியச் சோலையில் திளைத்து; தாம் நுகர்ந்த சமணமெனும் நற்கனியின் இன்சுவையை இந்நூலில் நன்கு காட்டி உள்ளார். கம்பன் போற்றும் காவியத்தலைவன் இராமன், அவனுவி அனைய சீதை, பிற உயர் தலைவர்கள் அனைவரும் ஜைன உள்ளம் படைத்தவர்களே என்றும்; இராமனிடம் வீரமும், சீதையினிடம் கற்பும் சிறப்பது போல் கம்பன் காவியத்திலே சமணம் சிறக்கின்றது என்றும் கவிஞர் கூறியுள்ளமை அவரது ஆய்வுத் திறனைக் காட்டுகிறது. ஜீவக சிந்தாமணியினின்றும் ஓரகப்பை முகர்ந்தேன் என்ற கம்பன்; தன் காப்பிய முழுவதும் ஜைனசமயக் கொளகைகளை நீக்கமற உணர்த்தியுள்ளதைக் கவிஞர் பல எடுத்துக்காட்டுகளால் திறம்பட காட்டியுள்ளார்.

நமது மதிப்புக்குரிய அறிஞரும் கவிஞருமாகிய உயர்திரு S. K. இராமராசன் அவர்கள் இலக்கிய ஆராய்ச்சியிலும் வரலாற்றுத்துறையிலும் பரந்தநோக்கமும் விரிந்த மனப்பான்மையும் படைத்தவர். இவைகளில் காணும் உண்மைகளை மறைக்காமலும், மாற்றாமலும் உள்ளது உள்ளவாறே உரைப்பதில் உறுதியும் துணிவும் கொண்டவர். அவ்வுன்னத உள்ளத்தூய்மையின் காரணமாகவே அப்புலவர் பெருமகன் வைணவ சமயத்தவராயினும் **கம்பர்—சமணம்** என்ற இப்பேரிலக்கியத்தை இயற்றி உலகுக்கு அளித்தார் இஃதொன்றே அவரது புலமைக்கும் நேர்மை நெஞ்சிற்கும் ஓர் சீரிய சான்றாகும்.

இதை நூல் வடிவாக வந்தவாசி திருத்தக்கதேவர் இலக்கிய மன்றம் வெளியிட உரிமை நல்கிய கவிஞருக்கும், அனுமதியும் அணிந்துரையும் தந்து சிறப்பித்த காரைக்குடி சான்றோர் திருமிகு **சா. கணேசன்**, M. L. A., அவர்களுக்கும் எங்களது உளமார்ந்த நன்றி உரியதாகுக.

இந் நூல் வெளிவருவதற்குக் காரணராகவும் எங்கள் முயற்சிக்கு உறுதுணைவராகவும் விளங்கிய சென்னை ஜீவபந்து **T. S. ஸ்ரீபால் அவர்களுக்கும்**, ஆரணி திரு. V. தேவேந்திரன் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இந் நூலை நேர்த்தியான முறையில் அச்சிட்டு தந்த ஆரணி குகன் அச்சக உரிமையாளர் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

இன்னணம்.

வந்தவாசி,
9—2—'65

**S. ஆதிச்சக்ரவர்த்தி நைனார்,**
தலைவர்,
திருத்தக்கதேவர் இலக்கிய மன்றம்.

தமிழகத்தின் தவப்புதல்வரும், தமிழ்த்தாயின் மெய்யுன்பரும்,
அரசியல் தியாகியும், கம்பன் தாசரும்,
காரைக்குடி கம்பன் கழகச் செயலாளரும், அறிஞருமாகிய,
**உயர்திரு. சா. கணேசன் M. L. A.**
அவர்கள் அருளிய

# நுழை வாயில்.

கன்னித் தமிழின் கவிச் சக்கரவர்த்தியான கம்பன் காப்பியப் பேருலகில் தனிமுடி சூடி, அரியணை வீற்றிருப் பவன்; எல்லாக் கலைகளையும் கற்றவன்; எல்லாத் துறை களையும் கண்டவன்; பல்வேறு சமயங்களையும் ஆய்ந்தவன். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமெனில், அவன் " கல்லாத கலையும் வேதக் கடலும் உலகத்து எங்கும் இல்லாத " என்று கூறிவிடலாம்.

காண்பவை, கற்பவை யாவும் கடவுளின் தோற்றமே எனத் தெளிந்தவன். எனவேதான், ஆன்று, அவிந்து அடங்கிய சான்றோனும் கம்பன் விருப்பு வெறுப்பற்ற மேலவனாய் மிளிர்கிறான். எங்கெங்கு அருமையானவை, பெருமையானவை, பயனுள்ளவை காணப்படுகின்றவோ அவற்றையெல்லாம் போற்றி, ஏற்றுக்கொள்வதில் அவனுக்கு நிகர் அவனேதான். இல்லாவிட்டால்,

" பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும்போல் பரந்த அன்றே !"

என்ற உண்மையுரை அவன் திருவாக்கில் மலர்ந்திருக்க முடியுமா ?

1960-ஆம் ஆண்டுக் கம்பன் திருநாளில் " கம்பனிற் காணும் சமயக் கருத்து " என்ற தலைப்பினை ஏற்று எட்டுக் கவிவாணர் எட்டுச் சமயக் கருத்துக்களை எடுத்துப் புலப்படுத்தக் கவியரங்கமேறினர். அவர்களுள் ஒருவர் " கம்பராமன் " என விளங்கும் திருவாளர் எஸ். கே. இராமராசன். இவர் அங்கு அரங்கேற்றிய அக் கவிதையே இங்கு இப் புத்தக வடிவெடுத்துள்ளது.

சகோதரர் இராமராசன் அன்பு நிறைந்தவர்; அறங்கடை நிற்பவர்; இறையன்பர்; மொழியன்பர்; கலையன்பர்; கம்பனடி மறவா நன்னெஞ்சினர். தமிழன்னையின் மெய்த் தொண்டர்களில் ஒருவர். பின்னர், சமயக் காழ்ப்பின்றி யார் மாட்டும், எதன் மாட்டும், பரிவுடையுளத்தினராய் விளங்குவதில் என்னே வியப்பு ?

தமிழகத்தில் இன்று சமணம் குடத்து விளக்காய் இருக்கலாம். சமய அளவில் பரந்த தொகையினரை அது கொண்டிருக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால் அது தன்னைப் பல்வேறு சமயங்களுள்ளும் கரைத்துக் கொண்டு, அவைகளினுள்ளே உயிராய், ஒளியூட்டிக் கொண்டு, வாழ்கிறது.

மொழிக்கும், கலைக்கும், —ஏன்? பிற பல சமயங்களுக்குமே அது கொடுத்த கொடையை வரலாற்று மெய்யுணர்வார் நன்றியுடன் பாராட்டத் தயங்குவதில்லை. சைவம் முதலிய பல்பெரும் சமயங்களும் இன்று தம்மவை என்று போற்றிப் புகழும் சீலங்களில் சிறந்தன பல, சமணத்தின் நன்கொடையே என்பதை மறுத்துவிடல் எளிதன்று.

சமயக் கட்டளையாக அல்லாமல், அறநெறியாக வள்ளுவப் பெருந்தகை சீலங்களை எல்லாம் தொகுத்து, வகுத்து முப்பாலாக வடித்துக் கொடுத்தருளினர். அதை அறவுலகம், அறிவுலகம், உச்சிமீதுவைத்துப் பாராட்டியது. அதன் பின், எந்நெறிப் பட்டாரும் அவற்றை ஏற்றுக் கொண்டே தீரவேண்டிய நிலை ஏற்பட்டது. அல்லாக்கால், தாம் பண்பாடற்ற, நாகரிகம்கூட இல்லாதவர்களாகக் கணிக்கப்பட்டு விடுவோமோ என்ற ஓர் அச்சம் தமிழக நல்லோர் உள்ளங்களில் தோன்றத் தொடங்கிவிட்டது அதன் பயனே சமணத்தின் கோட்பாடுகளில் பல தமிழகச் சமயங்களில் மலர்ந்து மணக்கத் தொடங்கிவிட்டமை. நடுநிலை பிறழாது மெய்ம்மை கண்டறிய முயல்வார் இக் கருத்தை ஏற்றுக்கொள்வார்கள்.

இந்த வகையில், கம்பனை நன்கு பயின்ற—அவனுக்கே தம் நன்னெஞ்சை இடமாக்கிய—சகோதரர் இராமராசன் கம்பனிற் காணும் சமணக் கருத்தினைக் கவிதையாய் வடித்தார். காரைக்குடி நகரில் கம்பன் திருநாளில் கவியறங் கேற்றினர்.

கவிதையில் கருத்தைச் செலுத்துமுன் அன்பர்கட்குப் பணிவுடன் ஒரு வார்த்தை. இதைப் பரிவுடன் கேட்க வேண்டும்.

அவரவர்க்கு அவரவர் சமயமே உயர்ந்தது—அன்றேல் —உகந்தது. அதை யாரும் மறுக்கப்படாது. மனிதனைப் போலவே சமயங்களும் காலம், இடம், சூழ்நிலைகளுக்கு ஏற்ப வளர்கின்றன; மாற்றமடைகின்றன. நம்மவர் காணாத, அல்லது கொள்ளாத, நல்லன ஏதும் இல்லை என்று முடிவு கட்டப்படாது. அப்படிப்பட்ட நல்லனவற்றைத் தழுவிக்கொள்ளத் தயக்கமோ அன்றித் தடையோ இருக்கவும் கூடாது. மற்றவர்கள் கண்டுகொண்ட நல்லனவற்றைத் தாங்களும் தழுவிக்கொண்டு பயனடைந்தோம் என்பதைச் சொல்லாமல் மறைக்கமுயல்வது பாபம்.

இந்த நன்னெறியில்தான் நம் முன்னவர் சென்றுளர். அதை ஒப்புக்கொள்வதால் நமக்கொன்றும் சிறுமை இல்லை; மாறாகப் பெருமையே விளையும். இதைஉடன்பட்டுவிட்டால் இக் கவிதையை ஆக்கியோர் மாட்டு நமக்கு அன்பு மலரும்: மரியாதை மணம் பரப்பத் தொடங்கியும்விடும். சரிதானே?

இனி உங்களை நுழைவாயிலிலேயே காக்கவைக்காமல், "கவிதைக் காவினுள்ளே சென்று கண்டு துய்த்து இன்புறுங்கள்!" என்று கூறி வழிவிட்டு ஒதுங்கிக் கொள்கிறேன். நன்றி

அன்பும் பணிவுமுள்ள

காரைக்குடி
28—1—'65

*சா. கணேசன்*

ஸ்ரீ

கம்பன் புகழ் பாடிக்
கன்னித் தமிழ் வளர்ப்போம்.

# முன்னுரை.



நம் பாரத நாடு பழம் பெரும் நாடு; பண்பாடு மிக்க நாடு; சீலம் மிக்க நாடு; உலகிற்கே ஞானதானம் செய்யும் நாடு; இங்ஙனம் நம் பாரத நாடு சிறப்புறுவதற்குக் காரணமாய் இருந்த சமயங்களில் சமணமும், (ஜைனம்) ஒன்று இதனை நேர்மையும், பெருந்தன்மையும் கொண்ட அறிஞர்கள் உடன்படுவர். அத்தகைய சமண மதச் சார்பால் நம் தமிழகம் எல்லையற்ற கலைகளையும், இலக்கணங்களையும் இலக்கியங்களையும் பெற்றுள்ளது. சமணசமயம் இல்லை என்றால் நம் நாட்டில் இன்று சைவத்தைக் காணமுடியாது. எங்கும் புலால் உண்பவர் கூட்டமே பெருகித் தோன்றும். தென்னாட்டைச் சைவ நாடாக்கிய சமணம் வாழ்க! வாழ்க! பல்லாண்டு வாழ்க!

நம் கவிச்சக்ரவர்த்தி கம்பனுக்கு ஆண்டு தோறும் காரைக்குடியில் விழா நிகழும். அவ்விழா "பேரவை" "கவியரங்கம்", "பட்டி மண்டபம்" என்ற மூன்று பகுப்புடன் நடைபெறும். கவியரங்கத்தில் ஆண்டுதோறும் கவிச்சக்ரவர்த்திக்குப் புதிய புதிய பாமாலைகள் சார்த்தப்படும் 1960-ஆம் ஆண்டு "கம்பன்-சமணம்" என்ற தலைப்பில் கவிதையாத்து வருமாறு அண்ணன் கணேசன் அவர்கள் அடியேனுக்குக் கட்டளை பிறப்பித்தார்கள் அக் கட்டளையைச் சிரமேற்கொண்டு கவிதை பாடி அரங்கேறினேன். கவியரங்கத் தலைவர் பேராசிரியர் தூத்துக்குடி வ. வு. சி. கல்லூரி முதல்வர் சீநிவாசராகவன்.

பேராசிரியர் அரங்கில் கவிதைகளைப் பாராட்டியதோடு தனிமையில் 'தம்பி! குறுகிய நோக்கம் கடந்து பரந்த மனப்பான்மையுடன் கவிதை யாத்துள்ளாய்'' என்று கூறி ஆசீர்வதித்தனர். அவர் அன்பையும், பண்பையும் நான் என்றும் மறவேன்.

இக்கவிதைகள் கம்பன் சமண சமயத்துடன் எங்ஙனம் தொடர்பு கொண்டுள்ளான் என்பதை விளக்குகின்றன. அடியேன் ''சிந்தாமணி'', ''சூளாமணி'', ''மேரு மந்திர புராணம்'' ''திருக்கலம்பகம்'' முதலிய நூல்களைப் பயின்ற போது உள்ளத்து எழுந்த உணர்ச்சிகள் கவிதையாக எழுந்துள்ளன.

மூவிலை யொரு நெடு வேலின்
மேவாத வினை யவுணர்
குன்று பட நூழி லாட்டி
வென்றிட்ட விறல் வெகுளியை!
மூவெயிலின் முரண் முருக்கி
மூவர்சர ணடைய நின்றனை!
சுருப்பு நாண் வில்லிபட
நெருப்புமிழ் நெடு நோக்கினை!
கோள் வலிய கொடுங் கூற்றைத்
தாள் வலியின் விழவு தைத்தனை!
பரிவில்கே வலக் கிழத்தி
பிரிவில்லா வொரு பாகனை!
யான்ற மெய் யறம் வளர்க்கும்
மூன்று கண் முனித் தலைவனை!
யால நெடு நிழல மர்ந்தனை!
ஞால மூன்று முடனளந்தனை!
தாழ்சடை முடிச் சென்னிக்
காசறு பொன் னெயிற்கடவுளை!
மன்னிய பே ருலகனைத்தும்
நின்னுள்ளே நீ யொடுக்கினை!
நின்னின்று நீ விரித்தனை!
நின்னருளி னீ காத்தனை! — [திருக்கலம்பகம்]

பகரலாங் குணக்கடல் சேர் முனிவர் சிந்தைப்
பாற்கடற் கண் வளர்ந்த பரந்தாமன் றன்னை
நிகரிலா வினைப் பகைவர் சிந்த வன்று
நெடுவிசும்பின் முகடுருவி நிமிர்ந்த மாலை
மகரவா ருதிவலயத் துலக மேழும்
வந்திறைஞ்ச வருளாவழி வலங் கொண்டேந்துஞ்
சிகரமா மணிநீல வண்ண வெற்பைத்
தேராதார் தாந் தம்மைத் தேராதாரே.

[திருக்கலம்பகம்]

நச்சரவு அணிநிழல் பச்சை மாமலைதனை
நிச்சலும் நினைப்பவர்க்கு அச்சம் இல்லையே

[அருங்கலச்செப்பு]

என்ற பாடல்களைப் பயிலும் போது என் உள்ளத்தில் எழுந்த உணர்வுகள் பல, ஆராய்ச்சிகள் பல; கற்பனைகள் பல; இப் பாடல்கள் படித்ததின் பயன் சமரசம். இச்சமரச உணர்வினால் விளைந்தது இக் கவிதைகள்.

இக் கவிதைகளை வானொலி மூலம் கேட்ட அன்பர் திரு. ஜீவபந்து T. S. ஸ்ரீபால் அவர்கள் எனக்குத் தம் மகிழ்ச்சியை முடங்கல் மூலம் எழுதி விடுத்தனர். தாம் இப்பாடல்களை வெளியிட விரும்புவதாகவும் குறித்து இருந்தனர். அப்பெரியாரின் முயற்சியே இன்று கனிந்து உள்ளது. ஸ்ரீபால் அவர்கள் காந்தியடிகளின் தொண்டர். விநோபாஜீயின் நன்னெறியைப் பின்பற்றும் பெருந்தகை. தென்னாட்டுக் கோயில்கள் கொலைக்களமாகாமல் கருணை நிலையமாக விளங்கத் தொண்டு புரிந்தவர்; அவர் உள்ளம் அன்புத்தேன் சுரப்பது. அவர்கட்கு என் மனம்கனிந்த நன்றி உரியதாகுக.

இந்நூலுக்கு நுழைவாயில் (அணிந்துரை) வழங்கியவர் அண்ணன் திரு. **சா. கணேசன்.** எம்.எல்.ஏ. அவர்கள். கணேசன் அவர்கள் தமிழகம் தந்த சால்புறு பெருந்தகை. இலக்கியம், மருத்துவம், சிற்பம், வான நூல், சாசனம், அரசியல் முதலாய பல்கலை தேர்ந்த மேதை. அவருடன் ஒரு பகல் பழகினும் நாம் பற்பல அற்புதச் செய்திகளைத் தெரிந்துகொள்வோம், அவர் பக்கத்தில் இருப்பதே பெரும் பேறு. கவிச்சக்கரவர்த்தி கம்பர் பிரான் பால் அவர் கொண்டுள்ள ஈடுபாட்டுக்கு அளவே இல்லை. அவ்ஈடுபாடே என் மனங்கவர்ந்து அவர்பால் அடிமையாக்கிற்று. அவர்கள் என்பால் கொண்டுள்ள பேரன்பிற்கு என்ன கைமாறு செய்ய வல்லேன். வாழ்க! வாழ்க! பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு வாழ்க! என்று வாழ்த்துகின்றேன்.

இக்கவிதை வெளிவரப்பல்லாற்ருலும் உறுதுணையாய் இருந்தவர் ஆரணி திரு. V. தேவேந்திரன் அவர்கள் அவர் நல் இளைஞர். பண்பாடுமிக்கவர். ஜின தருமததில் ஈடுபாடு கொண்டவர். அவர்கள் அன்பை என்றும் மறவேன்.

கவிச்சக்ரவர்த்தி கம்பனுக்கே வழிகாட்டியாக இருந்தவர் திருத்தக்க தேவர். அத் திருத்தக்கதேவர் பெயரைப் பெற்றுள்ள வந்தவாசி திருத்தக்கதேவர் இலக்கிய மன்றத்தினர் இந்நூலை வெளியிடுவது சாலப் பொருத்தமே. அவர்களுக்கு என் நன்றி. மன்றம் வாழ்க! வாழ்க! என்று வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,

**கம்ப நிலையம்,** அன்புள்ள,

S. K. **இராமராசன்,**

வேலூர் (சேலம்) **"கம்பராமன்"**

ஸ்ரீ

திருவறம் வளர்க!

கம்பன் புகழ் வாழ்க!

கன்னித் தமிழ் வாழ்க!

# கம்பன் சமணம்.

## (கவியரங்கம்)



திங்கள் நேர் முக்கு டைக்கீழ்
செஞ்சுடர் போல் இருந்து
பங்கஞ்செய் காம னோடு
மறலியைப் பதைப்பத் தாக்கி
மங்கலத் திரு வறத்தை
மகிழ்வுடன் அருளிச் செய்த
புங்கவன் பாதப் போதைச்
சென்னியில் பொலியச் சேர்ப்பாம்.

கண்ணன்றன் வேய்ங்குழலில் யாழ் குழைத்துக்
கானமுறு மல்லிகையின் வாசங்கூட்டித்
தண்ணென்ற தென்றலையும் மெல்லச் சேர்த்துத்
தகவுசெறி காதலையுங் கலந்தி ழைத்து
வண்ணமுறு திங்களருள் நிலாவை வார்த்து
மாண்புநிறை காவியத்தை யாக்கித் தந்த
அண்ணலருட் கம்பன்றன் பாதப் போதை
யகத்திருத்தி முப்போதும் போற்றிசெய்வோம்.

காலன்றன் கொடும்பல்லாற் சிதைக்க ஒண்ணுக்
காவியத்தை யிசைத்திட்ட கம்ப நாடன்
கோலமலர்ச் சேவடியைச் சிரத்தில் தாங்கிக்
கோதற்ற விழாஎடுக்கும் புனித நம்பி;
தாலமதில் பிறர்க்குழைத்துத் தனமளித்த
சால்புடையான்; காந்தியருள் நெறியின் மேவும்
சீலமுறு தனித்தலைவன்; எங்கள் அண்ணன்
சீர்மிக்க கணேசற்கு வணக்கம்! வாழி.

அவைக்கு :—

மறைவாகப் பழங்கதைகள் பேசி டாமல்
மாநிலத்துக் காவியங்கள் முற்றுங்கற்று
முறையாக ஆராய்ந்து—கம்ப நாடன்
மூவுலகிற் கவிச்சக்ர வர்த்தி என்று
திறமாக நாட்டுகலைத் தலைவ! வாசத்
தேனிலே ஊறியதீஞ் சொற்கள் கொண்டு
நிறைவான கவியாக்கும் புலவீர்! மிக்க
நேயமுறு பேரவையீர்! வணக்கம் வாழி!

முன்னுரை. சமணம்

விலங்குகளாய்ப் பிறநாட்டார் திரிந்த போது
மேலாய பண்புடைய பார தத்தை
நலங்கிளரும் பூபாள ராகம் பாடி
நவையுற்ற தூக்கத்தி லிருந்தெ ழுப்பிப்
புலங்குலவு நன்ஞானத் தெண்ணீராட்டிப்
பொலிவார்ந்த நற்காட்சி யமுதந் தந்து
வலந்திகழும் நல்லொழுக்கம் போதித் திட்ட
வாய்மை செறி சமணத்தை வணக்கம் செய்வோம்

சமண தருமம்.

பற்றின்மை உயிர்க்கிரங்கல் புலன டக்கம்
பண்புடைமை புலான்மறுத்தல் சிவத்தைப் பேணல்
நற்றுறவில் நிலைநிற்றல், மதுவி லக்கல்
நம்வாழ்வைப் பிறர்க்காக அர்ப்பணித்தல்,
மற்றவர்செய் தீங்கனைத்தும் மறந்து போற்றல்,
மாண்புடைய பெரியார்க்கு வழிபா டாற்றல்
செற்றமிலா திருத்தல், இவைமுக்கு டைக்கீழ்
திகழ்வாமன் புகன்றிட்ட தர்மமாகும்.

மங்கையரைக் கருணையின்றி யிழித்துப் பேசல்
வறள்துறவை வாயாரப் போற்றி செய்தல்
பங்கமுற நின்றுண்ணல் நீரா டாமை
பாயுடுத்தல் கொதுகுசேர் கண்ண ராதல்
தம் கையாற் கேசத்தைப் பறித்தல் தோளில்
தகவின்றி உறிசுமத்தல்—இவையே அந்தச்
சங்கையுறு சமணர்கள் தம் கொள்கை என்று
சால்பின்றி ஏசினர்நம் முன்னோர் அந்தோ!

நம்மவர்கள் சமணத்தை யிழித்துக் கூறி
நல்லறத்தை யழித்ததனுல்—பாரதத்தில்
வெம்மைதரு நாத்திகமும் மதப்பி ணக்கும்
விளைந்தனகாண்! இடந்தோறும் சுவைததும்பச்
செம்மைமிகு நற்சிந்தா மணியைத் தந்தும்
சிலம்பளித்தும் குறள்புனைந்தும் நன்னூல்யாத்தும்
நன்மையருள் சமணத்தை யிழித்துக் கூற
நாஎங்கன் எழுந்ததுவோ? அறியேன் அம்மா!

கொங்குவேள் மாக்கதையை—அமுதம் தேக்கிக்
கோதற்ற திருத்தக்க தேவர் யாத்த
பங்கமில்சிந் தாமணியைத்—தோல்வி காணுப்
பழம்புலவன் புகல்சூளா மணியை—ஆய்வோர்
துங்கமுறு சமணரின்பண் பாடு காண்பார்
தூய்மையுறு நாகரிகச் செவ்வி தேர்வார்
மங்கலஞ்சேர் துறவறச்சீர் உணர்வர் உள்ள
மாசகன்று பேரொளியால் மலர்ச்சிகொள்வார்

கம்பன்

விண்ணளக்குங் கிளைபரப்பித் திருமால் போல
விளங்குமோர் அரசமரம்—காற்றி டத்தும
மண்ணிடத்தும் புனலிடத்தும் கதிரி டத்தும்
வளம்பெற்று நிமிர்ந்தாற்போற்—கம்பநாடன்
வண்ணமுறு இயற்கையின்பால் சான்ருேர் யாத்த
மாசற்ற நூலின்பால் சமயத் தின்பால்
எண்ணற்ற அறிவுநலம் பெற்ருன்; பின்னர்
எம்பிரான் திருவருளால் நூலைச் செய்தான்.

மாசகன்ற துறவறத்தில் நிலைத்து நின்ற
மாண்புடைய சமணர்கள்தம் தொடர்பினலே
தேசமிகு தமிழன்னை வீறு பெற்ருள்;
திருவுற்ருள் அவளளித்த பாலை மாந்திக்
காசினிக்கே பெரும்புலவ ஞகித் தெய்வக்
கம்பனருட் செங்கோலைச் செலுத்து கின்ருன்
பேசரிய அவன்புகழைப் பாடி நாமும்
பிறங்குகின்ருேம் மூலததைத்தேர்மின் ! தேர்மின் !

## கம்பன்—சமணன்.

பாற்கடலில் துயில்கின்ற மூர்த்தி தன்னைப்
பரவலால், மூவுலகும் அளந்து கொண்ட
காற்கமலங் களைத்தலையிற் கொளலால், செய்ய
கமலத்தாள் சேர்மார்பன் றனையே என்றும்
போற்றுவதால், கடல் கடைந்து வீறுகாட்டும்
புயப்பெருமை சாற்றுவதால்—கம்பநாடன்
ஏற்றமுறு சமணன்காண்! நுட்பமாக
இதன்பொருளைச் சான்றோரே! உணர்ந்துகொண்மின்

முப்புரத்தை எரித்திட்ட பெருமான் மேன்மை
மொழக்குவதால், காமன்றன் உடலம் வேவ
வெப்பமுறும் அருணோக்கம் கண்ட கீர்த்தி
விளம்புவதால், மறலியுயிர்பதைக்கும் வண்ணம்
ஒப்பரிய திருவடியாற்றுக்கும் வன்மை
உரைப்பதனல், மடந்தையையோர் பாகங்கொண்ட
திப்பியத்தைப் புகழ்வதாற், கம்பநாடன்
சீர்சான்ற சமணன் காண்! ஆய்மின்! ஆய்மின்.

## சமணரும்—இராம கதையும்

கம்பன்றன் திருவுளத்தி லாட்சி செய்யும்
காகுத்தன் திருக்கதையைப் பரவிப் போற்றி
அன்புடனே சமணர்களும் ஏத்து கின்றார்;
அமைவுடைய பதுமபுரா ணத்தின்கண்ணும்
இன்பமுறு ஸ்ரீபுராணத்தின் கண்ணும்
ஏற்றமுறும் அவன்புகழை ஓதி ஓதித்
துன்பகன்று பேரின்பம் காணு கின்றார்;
தூமதியை யாவரே வேண்டாம் என்பர்?

### கம்பன்—சமணம்

கரும்பினிடைச் சாறூடிச் சுவைத்தல் போலக்
காவினிடை நறுமலர்கள் மணத்தல் போலப்
பெருங்குணங்கள் யோகியுளத் தொளிரல் போலப்
பேராண்மை யிராகவன் பால் மிளிரல் போல
அருங்கற்பு சனகியின்பால் விளங்கல் போல
அருட்கம்பன் காவியத்திற் சமணக் சொள்கை
நிரம்பிவழிந் தோடுகின்ற தறிஞர் கண்டு
நெஞ்சத்தில் அதைப் பாய்ச்சிப் புனிதரானர்.

### சமணம்—புலனடக்கம்

வன்புலன்கள் அகத்தடக்கின் ஞானம் முற்றி
மாயாத பேரின்பம் பெறலாம் என்றும்
புன்புலன்கள் சொல்வழியே செல்லின் தெய்வப்
பொலிவிழந்து நல்லின்பம் அழியும் என்றும்
அன்புடனே சமணமதம் உபதே சித்த
அருங்கருத்தை விளக்குதற்கே இராம காதை
நண்புடனே தோன்றியதென் றுணர்ந்தேன்;என்றன்
நற்கருத்திற் பிழையுளதேற் பொறுத்துக் கொண்மின்

செம்பவள வல்லியெனக் காம வல்லி
திசைதோறும் நன்மணத்தை யளளி வீசி
அம்பனையகூர் விழியாற் ருக்கும் போதில்
அசையாமற் காகுத்தன் வீர ஞனன்;
வம்புசெறி மலர்க் கூந்தற் சனகி தன்னை
வன்சிறையில் அடைத்தியெனப் போதித்திட்ட
வெம்புலனகள் வழிச்சென்ற இலங்கை மன்னன்
மேலாய நல்வாழ்வை யிழந்தான் அந்தோ.

கானகத்து மயிலொன்று மலர் குலுங்கும்
கற்பகத்தின் திருமேனி பெற்று வாசத்
தேனனைய மொழியுற்றுச் சோதி வீசுஞ்
சீருற்ற பேரழகைச் சாலக் கொண்டு
மானனைய விழியெய்தி வந்தாற் போல
வனப்புடனே காமவல்லி நின்ற போதும்
ஞானமதி கலங்காத இராமனுள்ளம்
நவையில்லாத துறவுள்ளம்; சமணவுள்ளம்.

சமணம்—தியாகம்.

செவ்விநிறை தாமரைக்கு மணத்தை நல்கும்
சீர்சான்ற பதமுடைய தேவி வானோர்
வெவ்விடரைப் போக்குதற்குப் புவியிற் றோன்றி
வெஞ்சிறையிற் காதலனைப் பிரிந்து வாடிச்
செவ்வியழிந் துருக்குலைந்தாள்; பிறருக்காகச்
சீரான நல்வாழ்வை யர்ப்ப ணித்தாள்;
வெவ்விடரைப் பரிசாகப் பெற்றாள்; அந்த
வேல்விழியின் நல்லுள்ளம் சமணவுள்ளம்

துங்கஞ்சேர் இந்திரனே முதலாம் வானோர்
தொழத்திகழும் இராவணன்றம் பெருமைகண்டும்
தங்கத்தாற் புனைந்துமணி யழுத்திச் செய்த
தகவார்ந்த கூடகோ புரங்கள் கண்டும்
சங்கரனும் வியப்பெய்தப் புரித வத்தின்
தரங்கண்டும் — சற்றேனும் மயக்கங்கொள்ளா
நங்கையுளம் புலனடக்கி வென்ற வுள்ளம்
நல்லறஞ்சேர் திருவுள்ளம்; சமணவுள்ளம்.

### சமணம்—அபயதானம்.

பிறர்துயரைப் போக்குதற்குத் தன்னின் பத்தைப்
பேணுதோன் தெய்வமெனச் சமணஞ்சாற்றும்
மறமன்றி வேறறியா இலங்கை வேந்தன்
வல்லரசிற் றுயருற்ற தேவர் வேண்ட
அறமருவு சக்கரத்தான் துயில்பே ணுமல்
அயோத்தியினில் தசரதன்றன் மகவாய்த்தோன்றிக்
குறைவற்ற துன்பத்தை அடைந்தான்; தன்னைக்
கொடுத்தறத்தைக் காத்திட்டான்; உலகம்வாழ்த்த.

அஞ்சினன் புகலிடத்தைக் கோவிலின் கண்
அன்புடனே சமண்மதத்தார் நிறுவினர்கள்;
நஞ்சனைய இராவணன்றன் கொடுமைக் கஞ்சி
நலிவுற்ற வீடணனை யிராமன் காத்தான்;
வஞ்சியுறு துயர்கண்டு புள்ளின் வேந்தன்
வருந்தாதே காப்பேன்யான் என்று கூறி
வெஞ்சமரம் புரிந்தாவி விட்டான் – இந்த
வீரருளம் சமணுள்ளம்; கருணையுள்ளம்.

### சமணம்—புலால் விலக்கல்.

கம்பன்றன் நாடகத்தில் எல்லை யில்லாக்
காதலான் குகப்பெருமான் தேனும் மீனும்
நண்புடனே கொணர்ந்திட்டான் இராமன் அந்த
நல்லூனை உண்டனனு? இல்லை யில்லை
பண்புடையான் கானகத்திற் பதினுன் காண்டும்
பரிவுடனே காய்கனியே நுகர்ந்தான் ஆய்மின்
செம்பொருளாம் காகுத்தன் மேனி யூடு
திகழ் குருதி; சமண் குருதி; ஐயமுண்டோ?

### சமணம்—கொலையில் வேள்வி

பற்றில்லாக் கலைக்கோட்டு முனிவன் வேள்வி
பண்புமிகு கோசிகன்றன் புனித வேள்வி
செற்றமிலா முனிவரர்கள் புரிந்த வேள்வி
சீர்சான்ற அறவேள்வி; கொலையே இல்லை;
கொற்றமுறும் இலங்கையர்கோன் மைந்தன்வேள்வி
கொலைவேள்வி — எனவகுத்த கம்ப நாடன்
நற்றவஞ்சேர் திருவுள்ளம் சமணவுள்ளம்
நாட்டினுக்கு வழிகாட்டுந் தெய்வ வுள்ளம்.

### பிழை பொறுத்தல்.

செந்தழலின் எரித்திடினும் வெறுப்பில் லாமல்
திகழ்பவரே பெரியரெனச் சமணம் சாற்றும்
சுந்தரத்தோ ளுடையபிரான் தன்னைக் கானில்
துரத்தியகை கேசிக்குங் கருணை செய்தான்
கந்தமுறு பூங்குழலாள் தன்னை வவ்விக்
கலக்கஞ்செய் அரக்கனையும் மன்னித்திட்டான்
சந்தமறைப் பொருளுணர்ந்த இராமன் கொள்கை
சலியாத பண்புடைய சமணக் கொள்கை.

குடைநிழலில் வாழாமற் கான கத்திற்
குலைந்திடவும், செய்யமணி முடியைநீத்துச்
சடைமுடியைப் புனைந்திடவும், வெஞ்சிறைக்கண்
சானகியார் துடித்திடவும் அரக்கன்மைந்தன்
படையதனல் இளையபிரான் விழவும், இன்னும்
பல்கோடி துயர்வரவும் — மூலமான
கடைபட்ட வுளமுடைய கைகே சிக்கும்
கனிந்தருளி மன்னித்தான் புனிதமூர்த்தி.

தந்தையிரு வரங்கேள்என் றுரைத்த போது
தாசரதி சாற்றினன்—தீயள் என்றே
எந்தையே ! நீ துறக்கச் சிந்தை வெந்த
என்தெய்வக் குற்றத்தைப் பொறுக்கவேண்டும்.
அந்தமில் சீர் மிகப்பெற்ற பரதன் மேலாம்
அருங்குணத்தன்; இவர்கள் என்தம்பிதாயாய்ப்
பந்தமுற அருள்செய்க என்று கேட்ட
பண்பறிவார் இராமகதையைப் பயன்தேர்ந்தோராம்.

சானகியைப் பிரித்தவனை கொன்று வீழ்த்தி
தருமத்துக் குயிரளித்துப் புனிதர் போற்றச்
சேனையுடன் அயோத்திக்கு மீண்ட நாதன்
சீர்சான்ற தன்தாயை வணங்க வில்லை;
ஞானமுறு சான்றோரைப் பணியவில்லை
நலிவுக்கோர் விளைநிலமாய்ப் புகலத்தக்க
மானமிலாக் கைகேசி தனையே முன்னம்
வணங்கினன் இவனுள்ளம் சமணவுள்ளம்.

புழுநீக்கி மதுவுண்ணும் இழிந்த வாழ்வைப்
பூவுலகிற் சமணரைப்போல் வெறுத்தார்யாவர் ?
வழுநீக்கக் காவியத்தைப் புனைந்த கம்பன்
வானரர்கோன் தனைமதுவை யுண்ணச்செய்தும்
எழுநீக்குந் தோளுடையான் விடணப் பேர்
ஏந்தலினை மதுவுண்ணு திருக்கச் செய்தும்
பழிநீக்குந் திருவறத்தை நாட்டிச் சென்ற
பண்பறிவார் காந்திநெறிப் பயன்தேர்ந்தோரே

விஞ்சிய நன்னுகரிகச் செவ்வி தேர்ந்த
மேலாய தனிச்சமணர் புலனைத்தீய்க்கும்
நஞ்சனைய தீக்குணத்தை யழித்த லாலே
நாட்கமல மென்னமுகம் மலரப் பெற்றுச்
செஞ்சவே பொலிந்திடுவர்—கம்பநாடன்
தேவர்கள்தம் பகையழிந்த திறத்தினுலே
எஞ்சலிலா தடைமகிழ்ச்சி சமணர் ஞானத்
தெழுகின்ற மகிழ்ச்சியென்ருன் நுட்பமாக.

இந்திரன்றன் தோட்புறத்திற் பாசம் வீக்கி
இணையற்ற பெருவலியிற் பொலிந்தவீரன்
வெந்தறுகண் காட்டியழிந் திட்ட போது
விண்ணேர்கள் எல்லோரும் தூசுநீக்கிச்
சிந்தையினிற் பேரின்பம் கொண்டார்; அந்தத்
திறஞ்சான்ற மகிழ்ச்சிதனக் குவமையாக
நந்தலிலாச் சமணர்களைக் கூறிச் சென்ற
நாயகன்றன் திருவுள்ளம் உணர்தல்வேண்டும்.

எச்சமயத் தவர்களையும் குறியாக் கம்பன்
இராமனையே தெய்வமெனக் கருதிவாழ்ந்தான்;
இச்சகத்தி லுளசமயம் எல்லாம் ஒன்றே;
ஏற்றத்தாழ் வில்லையிதை யுணர்ந்து கொண்டான்
மெய்ச்சமயம் சமணமென அறிந்தால் இந்த
மேதினியில் நன்ஞானம் மிளிரும்; வாழ்விற்
பொய்ச்சமயவெறி வேண்டாம்; அசோக நீழல்
பூமியினில் மறுபடியும் பரவ வேண்டும்.

வண்டினங்கள் பண்பாடும் அசோகத்தின்கண்
மாண்புடைய மாவீரன்—அச்சுதப்பேர்
கொண்டிலகு ஜினதேவன்—கோதாற்புன்மைக்
குறும்புசெயும் புலனடக்கித் தவம் புரிந்தான்
தண்டமிழின் வடிவாய எங்கள் அன்னை
சானகியார் அசோகமர நிழலின்கண்
மிண்டுசெயும் தசமுகனை அடக்கி வென்று
மேலாய தவம்புரிந்தான் ஒருமைகாண்மின்!

புவிமருவு கவிமன்னர் வணங்கி யேத்தப்
பொலிகின்ற கவிச்சக்ரவர்த்தி கம்பன்
சவிநிரம்ப புகழ் என்னும் முல்லை மெல்லத்
தவழ்வதற்குக் கொம்பாய கணேசஅண்ணன்
சுவைநிரம்பு திருத்தொண்டு வாழ்க! வாழ்க!
துறைத்தமிழின் பாங்குணர்ந்து துய்க்கும்இன்பத்
தவமுடைய அவைத்தலைவர் வாழி! மேலாஞ்
சான்றோரும் பேரவையும் வாழி! வாழி!



## கம்பர் பெருந்தகை போற்றும் ஜைன அறநெறிகளில் சிலவற்றைப் படித்து இன்புறுவோம்.

இல்லறந் துறந்த நம்பி யெம்மனோர்க்காகத் தங்கள்
வில்லறம் துறந்த வீரன் தோன்றலால் வேத நூலின்
சொல்லறம் துறந்திலாத சூரியன் மரபுந் தொல்லை
நல்லறம் துறந்த தென்னு நகைவர நாணுட் கொண்டான்.
(கிட்-வாலிவதை-72)

மறந் திறம்பாத தோலா வலியின ரெனினு மாண்டார்
அறந் திறம்பினரும் மக்கட்கு அருள் திறம்பினரு மன்றே
பிறந் திறந்துழலும் பாசப்பிணக்குடைப் பிணியிற் றீர்ந்தார்
துறந்தரும் பகைகண் மூன்றும் துடைத்தவர் பிறர் யார்
சொல்லாய்.
(சுந்தர-நிந்தனைப் படலம் 55)

இருவினையு மிடை விடா வெவ்வினையும்
மியற்றுதே இமையோ ரேத்தும்
திருவினையு மிடு பதந்தேர் சிறுமையையு
முறையொப்பத் தெளிந்து நோக்கிக்
கருவினைய திப்பிறவிக் கென்றுணர்ந்தாங்
கதுகளையும் கடையின் ஞானத்து
அருவினையின் பெரும் பகைஞர் ஆண்டுளார்
ஈண்டிருந்தும் வணங்கற் பாலார்.
(கிட்கிந்தா-நாடவிட்ட படலம்)

வில்லாளரானர்க் கெல்லாம் மேலவன் விளிதலோடும்
செல்லா தவ்விலங்கை வேந்தற்கரசெனக் களித்த தேவர்
எல்லாரும் தூசுநீக்கி ஏறிட வார்த்தபோது
கொல்லாத விரதத்தார்தம் கடவுளர் கூட்டமொத்தார்.
(யுத்த-இந்திரசித்து வதை 56)

# பிழை திருத்தம்.

| பக்கம்-வரி— | | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 4 | 8 | போரொளி | பேரொளி |
| 4 | 25 | மூலததைத்தேர்மின | மூலத்தைத்தேர்மின் |
| 7 | 8 | நவையில்லாத | நவையில்லாத் |
| 10 | 8 | இராம கதையை | இராம கதை |
| 10 | 9 | பிரித்தவனே | பிரித்தவனைக் |
| 12 | 8 | புரிந்தான் | புரிந்தார் |

(1) பதிப்புரை முதல் பக்கம் கடைசி வரி
திறம்பட — திறம்படக்

(2) பதிப்புரை முதல் பக்கம்
முகர்ந்தேன் — முகந்தேன்

(3) பதிப்புரை இரண்டாம் பக்கம்
ஆதிச்சகர்வர்த்தி — ஆதிசக்ரவர்த்தி

(4) நுழை வாயில் மூன்றும் பக்கம் கடைசி வரி
கவியறங் — கவியரங்

